# இரு காட்சிகள்!

“மலர்வனம், மனோரம்மியமான மாளிகை. விதவிதமான மின்சார விளக்குகள் பகலென பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. பாதுகாப்புப் படையினர் காவல் புரிகின்றனர்.

மன்னர் கொலு வீற்றிருக்கிறார். மந்திரி பிரதானியர்கள், மன்னரின் நிலை கண்டு மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிக் கிடக்கின்றனர். மங்கையர் நாட்டியம் ஓர் புறம். வீணையின் நாதம் வேறு கேட்கிறது. கர்ணாமிர்தகானம், கேட்போர் மனதைக் கொள்ளை கொள்ளுகிறது.

மன்னரை வாழ்த்தி வணங்குகிறார்கள். துதித்துத் தோத்திரம் செய்கிறார்கள். பரிசை வழங்குகிறார்கள். காணிக்கை செலுத்துகிறார்கள். மன்னரின் முகம் மலர்ந்து கிடக்கிறது. அதனைக் கண்ட மற்றவர் கண்களிலும் சந்தோஷம் தாண்டவம் ஆடுகிறது.

சரிகைத் தலைப்பாகை - விலையுயர்ந்த மேனாட்டு முறையில் ஆடை அலங்காரங்கள் விரல்களிலே விளக்கேற்றியது போன்ற வெளிச்சந்தரும் வைர மோதிரங்கள். வகை வகையான கார்களில். விழாவிற்கு வருகிறவர்கள் வந்தவண்ணம் இருக்கின்றனர்.

விருந்து- வாணவேடிக்கை - விளக்கு ஜோடனை - அவரவர்கள் அந்தஸ்துக்கான முறையில் வரவேற்பு உபசாரம் - வாழ்த்துச் செய்திகள் - இவ்வளவும் கண்கொள்ளாக் காட்சி யாக இருக்கிறது,

சாமுண்டீஸ்வரிக்குச் சம்பூரண சாத்துப்படி, மன்னரின் விசேஷ பூஜை. புரோகிதர்களுக்குத் தருமம், தானம், நல்ல முறையிலே நடத்தி வைத்தார் மன்னர். சாமுண்டியின் சக்தி கண்டு மன்னர் சொக்கிப் போனார் - பார்த்த மக்களும் பரவசம் கொண்டனர்.

இதுபோன்று மைசூரில் தசரா பண்டிகையின்போது, மைசூர் மன்னரும் மற்றவர்களும் கேளிக்கையில் மூழ்கி இருந்திருப்பர். வறுமையின் வாட்டம், பசிப்பிணியின் பயம் மாளிகையிலே கூடி இருந்தவர்களுக்குத் தெரிந்திருக்காது. வறண்ட தலையர்கள் – வளைந்த முதுகினர் – காய்ந்த வயிற்றினர் – சோர்ந்த நடையினர் – உருக்குலைந்த மேனியினர் – உடைந்த உள்ளத்தினர் – ஊரெங்கும் உள்ளனர் என்பது, கொலுவீற்றிருந்த மன்னருக்கோ, அவருக்குப் பராக்குக் கூறிக் கொண்டு பதவியைப் பற்றிக் கொண்டிருக்கும் மந்திரிமார் களுக்கோ, மன்னரின் தீக்கோலத்தைக் கண்டு களிக்க வந்த மற்றக் கனதனவான்களுக்கோ தெரிந்திருக்காது.

சாமுண்டீஸ்வரிக்கும் மன்னனைக் காப்பதில் இருக்கும் கவலை அளவிற்கு, மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்னும் நினைப்பு இருக்க முடியாதல்லவா? மன்னருக்காகப் பரிந்து பேசி, மாதாவின் அருளைப் பெற்றுத் தரும் பூசாரிகள், பொது மக்களுக் காக வாதாடும் பணியை எவ்வாறு மேற்கொள்ளப் போகிறார் கள்? அந்தப் பொறுப்பு மன்னருக்கேயன்றி, மாதாவுக்குமில்லை பூஜாரிக்குமில்லை! மக்கள் வழி மன்னராக இருந்தால்!

* * * *

**தி**ப்பையா குடும்பத் தலைவன். அவன், சாம்ராஜ்பேட்டை லட்சுமி அக்ரகாரத்தில் குடியிருந்து வந்தான். வயது முப்பத்தைந்து. சுகாதார இலாக்காவில் அவன் ஒரு பியூன்.

அவன் மனைவியின் பெயர் லிங்கம்மா. ஒருவர் வீட்டிலே, பாத்திரம் துலக்குவது, புடவைகளைத் தோய்ப்பது, வீடு சுத்தம் செய்வது, அவளுக்கிருந்த வேலை.

முதல் பெண்ணுக்கு வயது பத்து; பெயர் லிங்கம்மா. தேவம்மா, பதினாறு திங்களும் நிரம்பப் பெறாத சிறு குழந்தை.

கணவனும் மனைவியும் கிடைத்த வேலையைச் செய்து வந்தும்கூட, குடும்ப பாரத்தைத் தாங்க முடியவில்லை திப்பையா வால். வருகிற வருமானம், காலங் கழிப்பதற்குப் போதியதாக இருக்கவில்லை.

இந்நிலையில் உயிரோடு இருப்பது, திப்பையாவிற்குப் பிடித்தமாகத் தெரியவில்லை. ஓர் நாள், இரு சிறுமிகளையும் அழைத்துக் கொண்டு அங்குள்ள குளத்துக்குச் சென்று குளத்தில் இறங்கிவிட்டான்.

மாலை மூன்று பிணங்கள் குளத்தில் மிதந்தன. போலீஸ் விசாரணை நடத்திற்று. தற்கொலை என்று பஞ்சாயத்தார்கள் தீர்ப்புக் கூறினர்.

தாய் கூறினாள், வறுமை தாங்க முடியவில்லை, காக்க வகை கிடைக்கவில்லை, தற்கொலை செய்து கொண்டார் என் கணவர் என்று!

'பசிக்கிறது' என்று பத்து வயதுப் பெண் பதறும்பொழுது, பசியெடுத்ததும் சிறு குழந்தை மழலை மொழியால் அதனைத் தெரிவிக்கும் பொழுது, அதனைக் கேட்ட திப்பையாவின் நெஞ்சம் என்ன பாடுபட்டிருக்கும்? யாழ்–குழல் ஓசையினும் இன்பமூட்டக் கூடியது கிள்ளையின் மழலைமொழி! ஆம் திப்பையாவின் நிலையில் உள்ள வறுமையாளர்களுக்கு இது விலக்கு. இன்பந் தரவில்லை; துன்பத்தையே பெருக்கிற்று; வேதனையையே வளர்த்தது.

லிங்கம்மாவிற்கு இனி ஒரே ஒரு வேதனைதான். தான் உயிரோடு இருப்பதே அது!

* * * *

மாளிகையில் மன்னர் கொலு வீற்றிருந்த காட்சியையும் மண் குடிசையில் சிதைந்த வாழ்வு நடத்தும் பலரின் நிலையையும் ஒத்திட்டுப் பார்க்க வேண்டும் மக்கள். முன்னையது கண் கொள்ளாக் காட்சியாகவும், பின்னையது கண்களைக் குளமாக்கும் காட்சியாகவும் இருப்பதை உணரலாம். இந்த இரு காட்சிகள் இங்கு நாட்டில் இருக்கத்தான் வேண்டுமா? என்றென்றும் முடிதாங்கிகள் கொலு வீற்றிருக்கவும் மக்களில் பெரும்பாலோர் பசிப்பிணிக்குப் பலியாகி தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்குத் துணிவு பெறும் துன்பநிலை நீடிக்கவும் பார்த்துக் கொண்டு இருப்பதுதான் நல்லவர்கள் கடமையா? பெற்ற சுதந்திரம் – கிடைத்த விடுதலை வீணர்களுக்குத்தான் வாழ்வளிக்கும் சாதனமாக இருக்க வேண்டுமா? திப்பையாக் களின் தற்கொலை முயற்சியைத் தடுக்கும் நல்வாழ்வு பலருக்கும் அளிப்பதின் மூலம் கொலைச் செயலைக் குறைக்கும் பலரும் வாழும் பக்குவமுடையதாக நாட்டை மாற்றி அமைப்பதே, அதிகார பீடத்தில் அமர்ந்திருப்போரின் முதற் கடமையாகும். இந்த இரு காட்சிகளைக் கண்டும், ஆளுவோர் அசட்டையாக

இருப்பார்களானால், நேரிய முறையைக் கடைப்பிடித்து, ஆளவந்தார்களை வேறு வேலையைக் கவனிக்க அனுமதிச் சீட்டுக் கொடுத்தனுப்புவது, பொதுமக்களுக்கு என்றும் உள்ள கடமையாகும். இதுவும் புரட்சிதான்; பொதுமக்கள் விழிப்புணர்ச் சியின் மீதும், வாக்குரிமையின் துணை கொண்டும், புதியதோர் சமுதாயத்தைப் புவி மீது ஏற்படுத்துவது இதனாலும் சாத்திய மாகும். வெல்க புரட்சி! வாழ்க சமுதாயம்!

**17-10-1948**

